ஸ்ரீ: ||

# தியாகராஜரும் — கிரிராஜரும்

—(சிரோமணி, வித்வான் & ஸங்கீதம்
T. G. அனந்த சுப்ரமண்யம், தஞ்சாவூர்.)—

சோழ மண்டலம் என்றாலே கலை மணம் கமழும், கன்னிபாயும் பொன்னி ஓடும் தஞ்சைமாவட்டம் தனிச் சிறப்பைப் பெறும். சோழ நாட்டை ஆண்ட தனிப் புகழ் தேடித் தந்தவர் ஒருவர். கி. பி. 1712 முதல் 1728 வரை அரசுபுரிந்த சரபோஜி மகாராஜா என்று கூறலாம். இவர் காலத்தில்தான்கலை, கல்வி எல்லாம் மேன்மையடைந்து நம் பாரத தேசமெங்கும் மங்காப் புகழாக ஒளிர்ந்தது, கலைகளை வளர்த்ததோடல்லாமல் கலைஞர்களையும், கவிஞர்களையும் வாழ்வித்து மகிழ்ந்தார். அவர் காலத்திலே வாழ்ந்தவர் தியாகராஜர். இவர் திருவாரூரில் பிறந்து திருவாற்றையடைந்து வாழ்க்கை நடத்திவந்தார்.

ஸ்ரீ வால்மீகியின் அபராவதாரமான தியாகராஜர் ஸ்ரீராமனை உபாஸனா மூர்த்தியாகப் பூஜித்து வந்தார். ஸ்ரீராமனின் சிறந்த பக்தரானார். தியாகராஜர் பாடியதும், பேசியதும், செய்ததும் எல்லாம் ராமனைப்பற்றியே ; ராமன் இல்லை என்றால் தான் இல்லை என்று மனமுருகிப் பாடிப் பரவசமானார். ராமனை பரம்பொருளாகவும் ப்ரம்மமாகவும் கண்டார். பரப்ரம்மத்தை அடைய பல உபாஸனைகளிலிருந்தாலும் தியாகராஜர் மிகவும் மேன்மையான நாதோபாஸனையைக் கண்டார் " நாத தனு மநிசம் சங்கரம் नादतनुमनिशं शंकरम् " என்று பாடியுள்ளார். பரம்பொருளை அடைய வேண்டுமானால் நாதோபாஸனையால் தான் முடியும் என்பதை

नादोपासनचे शंकर नारायण विधुलु वेलसिरि ओ मनसा என்று கூறுகிறார். ஆகையால் நாதம் தான் ஈசுவரன். பரம்பொருள் என்று ஸ்ரீராமனையே உபாஸித்து வந்தார்.

தியாகராஜர் "எவரிநி" என்ற கீர்த்தனையின் சரணத்தில் சிவமந்தரமுனகு மாஜீவமு, மாதவமந்தரமுனகு ராஜீவமு, " நமசிவாய " என்ற பஞ்சாக்ஷரத்திலுள்ள. ம - என்பதும் "நாராயணாய" என்ற அஷ்டாக்ஷரத்திலுள்ள "ரா" என்பதும் 'ஈ' விவரமு தெலிசிந என்று பாடியுள்ளார். அதிலிருந்து அவ

ரது பக்தியின் தத்துவத்தையும், பரந்த மனத்தையும் நாம் காணுகிறோம். மேலும் ராமன் பரம்பொருள் என்பதற்கு மற்றொரு உதாரணம் ராமாயனி ப்ரம்மமுனகு பேரு रामायनि ब्रह्मुनकु पेरु என்றும் கூறுகிறார். எல்லா தெய்வத்தையும் காட்டிலும் ராமன் ஒருவன் தான் மேலானவன் என்பதை வேறொரு கீர்த்தனையில் பாடியுள்ளார். உண்டேதி ராமுடொகுடு उण्डेदि रामुडोगुडु என்றும் அக்கீர்த்தனையின் சரணத்தில் '' சண்ட மார்த்தாண்ட மத்ய மண்டலமுநநு செலங்குசு '' चण्डमार्ताण्डमध्यमनुनन् चेलङ्गचु என்ற சாந்தோக்ய உபநிஷத்ஸாரத்தை எடுத்துக் காட்டுகிறார்.

'' நீவுலேக யேதநுவுலு - நிரதமுகா நடுசுனு ''
'' நீவுலேகயேதருவுலு நிக்கமூகா மொலுசுனு ''
'' நீவுலேகயே வாநலு - நித்யமுகா குருசுனு ''

என்று பாடியிருக்கிறார். இதுபோல் ஸ்ரீராமனைப்பற்றி எளிய முறையில் தன் பாட்டுக்களில் பாடியிருக்கிறார்.

ஸ்ரீராமனையும் மட்டும் பாடாமல் இதர தெய்வங்களைக் குறித்துப் பாடியுள்ளார். தியாகராஜர் கீர்த்தனைகளின் பொருள் விளங்காமல் பாடுகின்றனர், பேசவும் முற்படுகிறார்கள் தியாகராஜரின் மனம் எவ்விதத்தில் ஈடுபட்டுள்ளது என்பது ஒருவராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. கீர்த்தனை பாடுபவர்கள் சப்த ஜாலங்களை கொட்டியே பாடிவிடுகின்றனர். கருத்தைக் கவனிப்பவர்கள் எவருமே இல்லை. கானத்துடன் ஞானத்தையும் புகட்டுகிறார் ஆங்காங்கே பாடுகிறார். 'சாந்தமுலேக ஸௌக்யமு லேது' शान्तमुलेक सौख्यमु लेदु என்று உபநிஷத் சாரத்தையும் ''சுகி எவரோ'' सुखीयेवरो தைவபேதமுலேக நித்யமைன ஸுஸ்வரபு கானமுதோ நிரந்தரமுந தியாகராஜநுத दैव भेदमु लेक नित्यमैन सुस्वरपु गानमुतो निरन्तरमु त्यागराजनुत என்றும் பாடுகிறார்.

தியாகராஜர் பல ஸ்தலங்களுக்குச் சென்று இறுதியாக திருப்பதிக்கு வந்து சேர்ந்தார். அப்பொழுது தேவாலயம் திரையினால் மூடப்பட்டிருந்தது,

அவ்வமயம் தியாகராஜர் தன்முன் வினைப்பயனை நினைத்து ,' தெரதீயகராதா '' என்ற கௌளி பந்துராக கீர்த்தனையைப்

பாடினர். அடியார்களுக்கு அபயமளிக்கும் வேங்கடவரதன் கருணை கூர்ந்து திரையை விலக்கி அருள்பாலித்தார். அக்கீர்த்தனையில் "தன் அக்ஞானத் திரையை நீக்கலாகாதா? மதமாத்ஸர்யத்துடன் கூடிய திரையை விலக்கலாகாகாதா? பசியால் வாடும் மீன் ஆகாரத்தைத் தேடிச் சென்று தூண்டியில் அகப்பட்டது போலல்லவா ஆகிவிட்டது. வெளிச்சம் தெரியாமல் மறைக்கப்பட்டத் திரையை அகலற்றலாகாதோ? சாப்பிடும் உணவில் ஈ விழுந்தது போலும், ஹரித்யானம் செய்யும் பொழுது மனம் செல்லக் கூடாத இடத்திற்குச் செல்வது போலும். இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் மான் வலையில் சிக்கிக் கொண்டது போலும் உன்னை நினைக்கும் தியாகராஜனின் மதமாத்ஸர்யத் திரையை அகற்றக் கூடாதா? ஹே வெங்கடரமணா! என்று கூறுகிறார். இவ்விதம் பாடியபிறகு திரை விலகியது. வெங்கடரமணனைத் தரிசித்துப் பரவசமாகி " வேங்கடேச நிநு" என்ற மத்யமாவதி கீர்த்தனையைப் பாடுகிறார். உன்னைப் பார்க்கப் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும். எவ்வளவுதரம் பார்த்தாலும் தெவிட்டாத ரூபத்தையுடையவனே! உலகில் எல்லாவற்றையும் காட்டிலும் நீ தான் மேன்மையானவன். உன்னைப் பாடும். பார்க்கும் பக்தர்களுக்கு இடைவிடாமல் நன்மையைச் செய்கிறவனே. உன்னைப் பார்க்க எவ்வளவு தவம் செய்தேனோ! உன் நாமமாகிற படிக்கட்டுக்களைக் கொண்டு பெரும் பேற்றை யடையப் போகிறேன். யோகிகளின் மனதில் எப்பொழுதும் விளங்குபவனே. பாகவத ப்ரியன் தியாகராஜன் துதிக்க வேங்கடகிரியாகிய ஸ்ரீகிரியில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கிரிராஜனே என்று பாடுகிறார்.

மேலும் ஸ்ரீகிரியில் எழுந்தருளியிருக்கும் பெருமானை ராமனாகவே கண்டு களித்தார். என்பதை "கிரிபை நெலகொன்ன" என்ற கீர்த்தனையால் கூறுகிறார். இவ்விதமாக தியாகராஜர் ஸ்ரீகிரிராஜனை வேங்கடேசனைப் பாடியுள்ளார், இவர் சிஷ்யரான பட்டணம் சுப்ரமண்ய அய்யர் தன் க்ருதிகளில் " வெங்கடேச" என்பதையே முத்ரையாக வைத்துள்ளாரென்பதைக் கவனிக்க வேண்டும்.

—(*)—

(எம்பெருமானும்—அவதாரங்களும்) அடுத்த இதழில் வரும்.